


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

## சொல்வளமே மொழி வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 1 விளைச்சல் : 1 | திருவள்ளுவர் ஆண்டு 2051 | சூன் திங்கள் - 2020





சொற்குவை

தமிழ்க் கலைக்கழகம்

சொல் உண்டியல்

தேவநேயப் பாவாணர் விருது

விழிப்புணர்வுக் கூட்டம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

அழைமையம் 14469

வீரமாமுனிவர் விருது

தூய தமிழ்ப் பற்றாளர் பரிசு

வல்லுநர் குழுக் கூட்டம்

அகராதிகள்

தமிழ் அகராதியியல் நாள் விழா

வணிக நிறுவனங்களில் தூய தமிழ்

நற்றமிழ் வளங்கொழிக்க
இன்று
சொல்வயலில்
விதைகள் தூவப்படுகின்றன!

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2051 - சார்வரி வைகாசி
சூன் 2020

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | தங்க. காமராசு<br>இயக்குநர் |
| பொறுப்பாசிரியர் | : | முனைவர் வே. கார்த்திக் |
| இதழ்க்குழு | : | முனைவர் மா. பூங்குன்றன்<br>திரு. சு. வீரவேலு<br>திருமதி. ஜெ. சாந்தி<br>திருமதி. கு. சங்கீதா<br>திரு. ஏ. காந்தி<br>திரு. ப. தீபக் |



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.78, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : dir.dtedp@tn.gov.in வலைத்தளம் : www.sorkuvai.com


தமிழ்மொழி சார்ந்து உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன.

**க. பாண்டியராஜன்**
தமிழ் ஆட்சி மொழி, தமிழர் பண்பாடு
மற்றும் தொல்லியல்துறை அமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.
நாள் 21.05.2020

## வாழ்த்துரை

தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு

- குறள் 212

தன் உழைப்பின் முயற்சியால் பெற்ற பொருள் உழைக்க இயலா மக்களின் தேவைக்கு என்ற வள்ளுவன் வாக்குப்படி, செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் இன்னுமொரு முயற்சியாக 'சொல் வயல்' பொதுமக்களின் பயன்பாட்டிற்கு வெளிவருவது கண்டு மகிழ்கிறோம். தமிழ்ச் சேவையையே தலையாய கடமையாகக் கொண்ட தமிழ்நாடு அரசு இவ்விதழை 'சொற்குவை' வலைதளம் வழியாக வெளியிட ஆணை அளித்தமைக்கு நெகிழ்கிறோம்.

தற்போதைய மின் ஆளுமைக்கு ஏற்றவாறு தமிழ்ப் புத்தக சூழலை மின்னிதழ் வாயிலாக வழங்கும் முயற்சிக்கு நாம் பாராட்டுகளைப் பகர்வதுடன் ஆங்காங்கே வெவ்வேறு காலகட்டங்களில், பல்வேறுபட்ட மலர்கள் எனும் புத்தகங்களிலிலிருந்து பெறப்பட்ட அறிவு எனும் தேன் துளிகளை மின்னிதழ் எனும் ஒரு பெருங்கூட்டில் சேகரித்து அளிக்கும் அரும்பெரும் பணியை ஆற்றும் இயக்கமாகத் திகழ்கிறது அகரமுதலி இயக்ககம்.

**க. பாண்டியராஜன்**
தமிழ் ஆட்சி மொழி, தமிழர் பண்பாடு
மற்றும் தொல்லியல்துறை அமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

நாள் ......21.05.2020.......

இச்சொல் வயல் என்னும் மின்னிதழ் தமிழ்நாடு அரசின் ஈடு இணையில்லா தமிழ்ப்பணிகள், அரிய கலைச் சொற்கள், செம்மை மிகு செய்திக் கருவூலம் மற்றும் இவ்வியக்கத்தின் திட்ட செயலாக்கம் மற்றும் ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கொண்ட ஒரு முழுமையான தகவல் களஞ்சியமாக விளங்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இம்மின்னிதழ் ஒவ்வொரு திங்களும் முதல் நாளன்று சொல் வயலாக மலர்ந்து, காய்த்து கனிந்து பல்வேறு மனங்களில் சுவையாக நிலைத்து, விதையாக வேரோடி தழைத்து வளர எமது வாழ்த்துக்கள்...

அன்புடன்

(க.பாண்டியராஜன்)

**மகேசன் காசிராஜன்,** இ.ஆ.ப.,
அரசு செயலாளர்




தமிழ் வளர்ச்சி மற்றும்
செய்தித்துறை

**27.05.2020**

## வாழ்த்துரை

தொண்டு செய்வாய் தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும் துடித்தெழுந்தே

பாவேந்தர் பாரதிதாசன்

அருந்தமிழ் மொழியின் வளர்ச்சிக்கான ஆக்கப் பணிகளில் முதன்மையானது அகரமுதலி உருவாக்கப் பணியே ஆகும். ஏனெனில், சொற்களைப் பாதுகாத்தால்தான் மொழியைப் பாதுகாக்க முடியும்.

தமிழ்மொழியிலுள்ள சொற்களைப் பதிந்து காக்கும் கருத்துக் கருவூலங்களான அகரமுதலிகளை உருவாக்கிடும் பணியை திறம்படச் செய்துவரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககமானது சொற்குவை தமிழ்க்கலைக்கழகம் அகராதியியல் விழிப்புணர்வுக் கருத்தரங்கம் குறித்த செய்திகளை வெளியிட ஏதுவாகச் 'சொல்வயல்' என்ற பெயரிலான மாத மின்னிதழை வெளியிடவுள்ளது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

'சொல்வயல்' மின்னிதழின் பெருமை தமிழறிஞர்கள் மற்றும் தமிழார்வலர்களின் மனங்களிலெல்லாம் மின்னி மிளிர வாழ்த்துகிறேன்.

(மகேசன் காசிராஜன்)

தலைமைச் செயலகம், புனித ஜார்ஜ் கோட்டை, சென்னை–600 009. மின்னஞ்சல் : tdinfosec@tn.gov.in
தொலைபேசி (அலுவலகம்) : 044–25672887, நிகரி : 044–25672021



# ஆசிரியர் பேசுகிறார்

அன்பானவர்களே வணக்கம்!

**மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள்** தாய்த்தமிழ் மீது கொண்ட தனிப்பெரும் அக்கறையினால் இன்று செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் புத்துயிர் பெற்றுள்ளது. **மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் திரு. க. பாண்டியராசன்** அவர்களால், இவ்வியக்ககம் புதுப்பொலிவு பெற்று உலகத் தமிழர்களின் போற்றுதலையும், பாராட்டுதலையும் பெற்று வருகிறது.

மதிப்பிற்குரிய தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசு செயலாளர் திரு. மகேசன் காசிராசன் அவர்கள் கொடுக்கும் ஊக்கத்தால் இவ்வியக்ககம் முழு வீச்சில் இயங்கிக் கொண்டிருக்கிறது. கடந்த இரண்டாண்டுகளில் இவ்வியக்கக வளர்ச்சிக்கென்றே பல்வேறு புதுமைத் திட்டங்கள் அறிவுப்புகளாகச் சட்டப்பேரவையில் அறிவிக்கப் பெற்று, அவை செயலாக்கம் பெற்று வருகின்றன. முன்பு எப்போதும் இல்லாத அளவிற்கு இந்தாண்டு (2020–2021) அகரமுதலி இயக்ககத்திற்குச் சட்டப்பேரவையில் பத்துத் திட்டங்கள் அறிவிக்கப் பெற்றுள்ளன. முத்தாய்ப்பான பத்துத் திட்டங்களும் தமிழ்மொழி வளர்ச்சிக்கு நிலமாகவும், நீராகவும் இருக்கும்.

2018 ஆம் ஆண்டு வரை அகராதித் தொகுக்கும் பணிகளை மட்டுமே அமைதியாக மேற்கொண்டு வந்த இந்த இயக்ககம், இன்று தன் எல்லைகளை விரிவுபடுத்திக் கொண்டு பொதுவெளிக்கு வந்து, உலகத்தமிழர்களால் அன்றாடம் உற்றுநோக்கப்படும் ஒரு முதன்மை இயக்ககமாக வளர்ந்திருக்கிறது.

அண்மைக்காலங்களில் ஊடகங்களுக்கு இவ்வியக்ககச் செயல்பாடுகள் மிகவும் தேவையான செய்திகளாகியிருக்கின்றன. ஆய்வியல் அறிஞர்களும், தமிழ்ப் பற்றாளர்களும், மாணவ–மாணவிகளும் ‘சொற்குவை’ வலைத்தளத்தைத் தொடர்ந்து பயன் படுத்தத் தொடங்கியுள்ளனர். இவ்வியக்ககத்துடன் உள்நாட்டறிஞர் களும், அயல்நாட்டறிஞர்களும் தொடர்ந்து தொடர்பிலிருந்து தங்கள் கருத்துகளையும் வழங்கி வருகின்றனர்.

தூயதமிழ்ச் சொற்களை இணையம் வழியாக உலகம் முழுமைக்கும் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற மாண்புமிகு துறை அமைச்சரின் எண்ணத்தை இவ்வியக்ககம் இப்போது வெற்றியடைய செய்து இருக்கிறது. காலத்திற்கேற்ற கலைச்சொற்களை உருவாக்கி வழங்கும் ‘சொல் தொழிற்சாலையாக’ இவ்வியக்ககம் தன்னைத் தகவமைத்துக் கொண்டுள்ளது.

சொற்களைப் பாதுகாத்தல், புதிய சொற்களை உருவாக்குதல் என்ற இரண்டு செயல்களின் மூலம் மொழியை உயிர்ப்புடன் வைத்திருப்பதற்கென்று அரசு ஒரு தனி இயக்ககத்தைக் கட்டமைத்து இயக்குகிறது என்பதுதான் தமிழ்நாட்டின் தனிச்சிறப்பாக நான் கருதுகிறேன். உலகில் வேறு எந்த மொழிக்கும் கிட்டாத வாய்ப்பாக இதனைக் கருதலாம். பல்வேறு காலக் கட்டங்களில் நாட்டில் நடந்த போர்களால், பிற மொழித் தாக்குதலுக்கு ஆட்பட்ட நமது மொழியைக் காத்து, வளர்த்து, இளமை குன்றாத செம்மாந்த மொழியாக நமக்கு வழங்கிச் சென்ற மொழிப்போர் ஈகியரை இவ்வியக்ககம் எப்போதும் நினைவுகூர்ந்து மொழிக் கடமைகளைச் செவ்வனே செய்து வருகிறது. விரைவில் உலகத் தரத்துடன் கூடிய ஒரு கட்டடத்திற்கு இவ்வியக்ககம் இடம்பெயர்வதன் வாயிலாக அகரமுதலி இயக்ககம் தன் வளர்ச்சியின் அடுத்த நிலையை எட்டிப்பிடித்திருக்கிறது. இந்நிலையில் இவ்வியக்ககச் செயற்பாடுகள் பொதுமக்களுக்கு உடனுக்குடன் சென்றுசேரும் வகையில் ‘சொல்வயல்’ என்ற மின்னிதழைத் திங்கள்தோறும் வெளியிடுவதற்கு இசைவளித்து அரசாணை வெளியிடப்பட்டிருப்பது இவ்வியக்ககத்தின் வளர்ச்சிக்கு மேலும் வலிமையைக் கொடுத்துள்ளது.

கலைச்சொற்கள், சொல்லாய்வுகள், அகராதியியல் சார்ந்த அரிய கட்டுரைகள், தமிழ்மொழி சார்ந்த அரசு அறிவிப்புகள், பாக்கள் (கவிதைகள்), மொழிசார்ந்த உலகச் செய்திகள், அகராதி வல்லுநர்களின் வாழ்க்கை வரலாறு, இயக்ககத்தின் செயற்பாடுகள் ஆகியவற்றைச் சுமந்து வரும் ‘சொல் வயல்’ மின்னிதழ், எல்லோரும் படித்துப் பாதுகாக்க வேண்டிய பதிவாக இருக்கும். குறிப்பாக, ‘சொல் வயல்’ மாணவ – மாணவியருக்குப் பயனளிக்கும் வகையிலும், அவர்களும் பங்களிக்கும் வகையிலும் ஒவ்வொரு மாதம் ஒன்றாம் நாள் வெளிவரும். சொல்வயலின் விளைச்சல் பெருகிப் பயனளிக்க வாசகர்களின் ஒத்துழைப்பையும் வேண்டி விழைகிறேன். வாசகர்களாகிய தங்களுடைய படைப்புகளும் செய்தித் துணுக்குகளும் வரவேற்கப்படுகின்றன. எங்கள் ஆசிரியக் குழுவால் தேர்வு செய்யப்படும் படைப்புகள் மின்னிதழில் இடம்பெறும். உங்களுடைய வாழ்த்துகளோடு ‘சொல் வயல்’ நல்ல தமிழ் விளைச்சலைக் கொடுக்கும் என நம்புகிறேன்.

“எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்”

வணக்கம்

அடுத்த இதழில் பேசுவோம்...

சொற்குவையில்

# வட்டார வழக்குச் சொற்கள்

**திரு.க.பாண்டியராசன்**
மாண்புமிகு அமைச்சர்
தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு (ம) தொல்லியல்துறை

"**வி**ழிபோல எண்ணி நம் மொழி காக்க வேண்டும்" என்று தன் திரைப்படப் பாடல்கள் வழியாகவும் மொழிப்பற்றை ஊட்டிய 'பொன்மனச் செம்மல்', 'புரட்சித்தலைவர்', எம்.ஜி.ஆரின் வழியில், "மக்களால் நான், மக்களுக்காகவே நான்" என்ற கொள்கைப்படி மக்களாட்சி நடத்தியவர் மாண்புமிகு புரட்சித்தலைவி அம்மா அவர்கள்.

மாண்புமிகு அம்மா அவர்களின் வழியில் நல்லாட்சி நடத்திக்கொண்டிருக்கும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் எடப்பாடி திரு.கே.பழனிசாமி அவர்களும் நம் தாய்மொழியாகிய தமிழ்மொழியின் பெருமையை உலகுக்குப் பறைசாற்றவும் தமிழின் முன்னேற்றத்திற்காகவும் அரிய நல்ல பல திட்டங்களைச் செயற்படுத்திவருகிறார்.

அத்தகைய திட்டங்களில் ஒன்றுதான் 28.06.2018 ஆம் நாளன்று மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் சட்டப்பேரவையில் விதி எண் 110இன் கீழ் அறிவித்த சொற்குவைத் திட்டமாகும். தமிழ்மொழியிலுள்ள எல்லாச் சொற்களையும் ஒரே தளத்தின்கீழ் தொகுப்பதன்மூலம் சொல்வளத்தைப் பாதுகாத்து இணையப் பொதுவெளியின் மூலம் உலக மக்களின் பயன்பாட்டிற்கு வழங்குவதே சொற்குவையின் நோக்கமாகும். இதற்கென 05.07.2019ஆம் நாள் அமெரிக்காவின் சிகாகோவில் நடைபெற்ற பத்தாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டின்போது சொற்குவை வலைத்தளம் (www.sorkuvai.com) சொற்குவை.காம் தொடங்கி வைக்கப்பட்டு, தற்பொழுதுவரை இந்த வலைத்தளத்தில் 380186 சொற்கள் பதிவேற்றம் செய்யப் பட்டுள்ளன.

பழந்தமிழ்ச்சொற்களைப் பதிவு செய்து பாதுகாப்பதும், காலத்திற்கேற்ற புதுவரவுச் சொற்களை இணைத்துச் சொல் எண்ணிக்கையைப் பெருக்குவதுமே மொழிப் பாதுகாப்பிற்கான முதற்பணி என்பதால், இந்த நோக்கத்துடன் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சொற்குவையைத் திறம்படச் செயற்படுத்திவருகிறது.




இந்நிலையில் சொற்குவையின் அடுத்தகட்ட வளர்ச்சியாக வட்டார வழக்குச் சொற்களையும் இந்த வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்வதற்கான நடவடிக்கைகள் தொடங்கப்பட்டுள்ளன. கடந்த 24.03.2020 ஆம் நாள் நடைபெற்ற தமிழ்வளர்ச்சி மானியக் கோரிக்கையின் போது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்காக அறிவிக்கப்பட்ட 10 அறிவிப்புகளில் "வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதி ரூபாய் 12 இலட்சம் செலவில் வெளியிடப்படும்" என்ற அறிவிப்பும் இன்றியமையாததாகும். அகரமுதலி இயக்ககத்தால் வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதி வெளியிடப்படும்நிலையில் அந்த அகராதியிலுள்ள சொற்களும் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படும். இதனால் தமிழ்மொழியின் தனிச்சிறப்புடைய சொற்கள் பாதுகாக்கப்படும்.

மொழிக்கலப்பைத் தவிர்த்தலும், இருக்கின்ற சொற்களை அழியாமல் காத்தலுமே மொழிக்காப்பிற்கும் மொழி வளர்ச்சிக்குமான முதல்படி எனலாம். ஒரு மொழியில் பிறமொழிச் சொற்கள் கலந்தால் நாளடைவில் அம்மொழிக்கான தனிச்சிறப்புடைய சொற்கள் வழக்கிழந்து மறைந்துவிடும். அதனால் அம்மொழியின் சொல் எண்ணிக்கை குறைந்து மொழி வளம் குன்றிவிடும். அது தமிழ்மொழிக்கு நிகழாமலிருக்க மக்களின் வாய்மொழிச் சொற்களாகிய வட்டார வழக்குச் சொற்களைப் பாதுகாக்க வேண்டும்.

தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளில் அந்தந்தப் பகுதி மக்களால் பேசப்படும் பேச்சுமொழிச் சொற்களான வட்டார வழக்குச் சொற்கள்தான் தமிழ்மொழியின் சொல் வளத்திற்கு ஆக்கம் சேர்ப்பவையாக அமைந்துள்ளன.

சொற்களால், அவை தரும் பொருள்களால், ஒலிப்பு முறைகளால் வேறு வேறாகக் கிளைத்தும் பரவியுமிருக்கும் வட்டார வழக்குச் சொற்கள்தான் தமிழ் மொழியின் தொடக்க நிலையைக் கண்டறிவதற்கும், காலந்தோறும் தமிழின் வளர்ச்சியை அறிவதற்கும், வேர்ச்சொற்களை உணர்ந்து இக்காலத்திற்கேற்ற புதுச்சொல்லாக்கம் படைப்பதற்கும் பெருந்துணையாக அமையும்.

வட்டார வழக்குச் சொற்களைப் பதிந்து பாதுகாத்து அடுத்த தலைமுறையினரிடம் கொண்டு சேர்க்காவிட்டால், தமிழ்நாட்டின் ஒரு பகுதியில் வழங்கும் சொல்லுக்கு வேறு ஒரு பகுதியில் பொருள் புரியாமல் போவதோடு, நாளடைவில் வட்டார வழக்குச் சொற்களே வழக்கொழிந்துவிடும்.

பெரும்பாலும் பிறமொழிக் கலப்பைத் தன்னுள் ஏற்றுக்கொள்ளாத வட்டார வழக்குச் சொற்களைத் தொகுப்பதன் மூலம், ஒரு பகுதியில் வழங்கப்படும் தூயதமிழ்ச் சொல் மற்ற பகுதியினருக்கும் அறிமுகமாவதோடு, அந்தந்தப் பகுதி மக்களின் சொல்லாளுமைத் திறனையும் உணர்ந்து கொள்ளலாம்.

எனவே தமிழ்நாட்டின் பகுதிகளைச் சென்னை, சேலம், திருச்சி, திருநெல்வேலி, மதுரை, கோவை என 6 மண்டலங்களாகப் பகுத்து அப்பகுதிகளுக்கு நேரில் சென்று கள ஆய்வு செய்து அப்பகுதிகளில் வழங்கும் வட்டார வழக்குச் சொற்களைப் பொருளுடன் தொகுத்து, அகரவரிசைப்படுத்தி "வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதி"யை வெளியிடுவதற்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் எடுத்துள்ள முயற்சி காலத்தின் தேவை மட்டுமல்ல, அது தமிழ்மொழியின் வளர்ச்சிக்கும் தேவையான ஒன்றுதான்.





## முத்தான பத்துத் திட்டங்கள்

24.03.2020 ஆம் நாள் நடைபெற்ற 2020–2021ஆம் நிதியாண்டிற்கான தமிழ்வளர்ச்சித்துறை மானியக் கோரிக்கையின்போது மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு (ம) தொல்லியல்துறை அமைச்சர் அவர்களால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்கு அறிவிக்கப்பட்ட அறிவிப்புகள்

1. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மூலம் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் அறிமுகப்படுத்திச் செயல்படுத்திட ரூபாய் 4 இலட்சத்து 21 ஆயிரம் ஒதுக்கீடு செய்யப்படும்
2. கலைச்சொல்லாக்கத்தில் சிறந்து விளங்கும் கல்லூரி மாணவர்களைப் பாராட்டும் வகையில் சொல்லின் தாய் என்ற பெயரில் புதியதாக விருது தோற்றுவித்து ஆண்டுதோறும் வழங்கப்படும்
3. பிறமொழிக் கலப்பில்லாமல் தூய தமிழிலேயே பேசுவோரைப் பாராட்டும் வகையில் தூய தமிழ்ப்பற்றாளர் என்ற பெயரில் புதியதாக விருது தோற்றுவித்து ஆண்டுதோறும் வழங்கப்படும்
4. தூய தமிழைப் பயன்படுத்தும் காட்சி மற்றும் அச்சு ஊடகங்களை ஊக்குவிக்கும் வகையில் தூய தமிழ் ஊடகம் என்ற பெயரில் ஆண்டுதோறும் விருது வழங்கப்படும்
5. பிறமொழிக் கலப்பில்லாத தூய தமிழ்ச் சொற்களையும் புதிய தமிழ்க் கலைச் சொற்களையும் பயன்படுத்தும் பாவலர்களை ஊக்குவிக்கும் வகையில் நற்றமிழ்ப் பாவலர் விருது ஆண்டுதோறும் வழங்கப்படும்
6. துறைசார் சொற்குவை வல்லுநர் குழுக் கூட்டம் ஆண்டுதோறும் நடத்திட ரூபாய் 5 இலட்சம் ஒதுக்கீடு செய்யப்படும்
7. தமிழ்க் கலைக்கழகக் கூட்டச் செலவினத் தொகை உயர்த்தி வழங்கப்படும்
8. தமிழர் வாழ்முறைப் பண்பாட்டு அகராதி உருவாக்கப்படும்
9. ஒருபொருட் பன்மொழி அகராதி வெளியிடப்படும்
10. வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதி ரூபாய் 12 இலட்சம் செலவில் வெளியிடப்படும்

## காலத்திற்கேற்ற கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| 1 | Virus | தீநுண்மி |
| 2 | Contagion | தொற்றொட்டி / ஒட்டுவாரொட்டி |
| 3 | Social distance | குமுக இடைவெளி / குமுகச் சேய்மை |
| 4 | Pandemic | பெருங்கொள்ளைநோய் |
| 5 | Asymptomatic | நோய்க்குறியிலி |
| 6 | Lockdown | பொதுமுடக்கம் |
| 7 | Mask | முகக்கவரி / முகவணி |
| 8 | Telemedicine | தொலை மருத்துவம் |
| 9 | Quarantine | தொற்றுக்காப்பு |
| 10 | Epidemic | கொள்ளைநோய் |
| 11 | Hand sanitizer | கைத்தூய்மி |
| 12 | Disinfection | தொற்று அகற்றல் |
| 13 | Isolation | தனிமைப்படுத்தல் |
| 14 | Pandemi cophobia | பெருங்கொள்ளை நோய் அச்சம் |
| 15 | கிருமி நாசினி | நுண்ணுயிரிக் கொல்லி |
| 16 | சிகிச்சை | மருத்துவம் |
| 17 | கபசுரக்குடிநீர் | சளிக்காய்ச்சல் நீக்கக் குடிநீர் |
| 18 | சுகாதாரம் | நலவாழ்வு |
| 19 | தீவிரம் | கடுமை |
| 20 | அமுல்படுத்தல் | நடைமுறைப்படுத்தல் |
| 21 | நிவாரணம் | துயரழிப்பு |
| 22 | அத்தியாவசியம் | இன்றியமையாத் தேவை / கட்டாயத் தேவை |
| 23 | ஆலோசனை | கலந்தாய்வு |
| 24 | அபராதம் | தண்டம் / ஒறுப்புக் கட்டணம் |
| 25 | விநியோகம் | வழங்கீடு / பிரித்து வழங்கல் |

## காணொலிக் காட்சியில் கலந்தாய்வுக் கூட்டம்!

உலகெங்கும் நீடிக்கும் இந்த ஊரடங்குச் சூழலிலும் அகரமுதலி இயக்ககமானது தனது சொல்லாய்வுப் பணிகளில் தொய்வின்றித் தொடர்ந்து செயலாற்றி வருகிறது. கடந்த மார்ச்சு 11ஆம் நாள் நடைபெற்ற “தமிழ் அகராதியியல் நாள் நிறைவு விழா“வின் போது அமைச்சர் பெருமக்களால் வெளியிடப்பட்ட “அகராதி ஆய்வு மலர்“ பயனாளர்களின் பார்வைக்காகச் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டு, தமிழறிஞர்கள் மற்றும் தமிழார்வலர்களின் பாராட்டைப் பெற்றுவருகிறது. ஊரடங்குச் சூழலிலும்கூட மொழிக்கலப்பைத் தவிர்த்து, புதிய சொல்லாக்கங்களின் வழியே தமிழ்மொழியின் சொல்வளத்தைப் பெருக்கும் நோக்கில், இவ்வியக்ககத்தின் பதிப்பாசிரியர்கள், உதவிப்பதிப்பாசிரியர், மற்றும் தொகுப்பாளர்கள் மக்களின் பேச்சுவழக்கிலும், செய்தி ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிச் சொற்களைத் தொகுத்து அவற்றிற்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை வடிவமைத்து வழங்கிவருகின்றனர். 01.04.2020 முதல் 30.04.2020 வரை மொத்தம் 3,212 தமிழ்க்கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டுள்ளன. சொற்குவையின் சுட்டுரைப் பகுதியில் நாள்தோறும் 10 பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்ச்சொற்கள் பதிவிடப்பட்டுவருகின்றன. தமிழறிஞர்களும், தமிழாய்வாளர்களும், தமிழார்வலர்களும் அதனைப் பார்த்துத் தத்தம் பாராட்டுதல்களையும் கருத்துரைகளையும் பதிவிட்டு வருகின்றனர். மேலும், ஐந்து அச்சு ஊடகங்களையும் எட்டு காட்சி ஊடகங்களையும் ஆய்வு நிலையில் ஊன்றிக் கவனித்து அவற்றில் கையாளப்பட்டுள்ள பிறமொழிச் சொற்களை இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்களும் தொகுப்பாளர்களும் தொகுத்து வருகின்றனர். இயல்பு நிலை திரும்பியதும் இத்தொகுப்பும் இயக்குநரிடம் ஒப்படைக்கப்படவுள்ளது. இந்நிலையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் திரு.தங்க.காமராசு அவர்கள் தலைமையில் இயக்ககத்தின் பணிமுன்னேற்றம் குறித்த கலந்தாய்வுக் கூட்டம் காணொலிக் காட்சியின் வாயிலாக 15.05.2020 வெள்ளிக்கிழமை பிற்பகல் 2.00 மணியளவில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் இயக்ககத்தின் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர், தொகுப்பாளர்கள் உள்ளிட்டோருடன் திரு.அ.மதிவாணன், திரு.நா.சு. சிதம்பரம் ஆகியோரும் கலந்துகொண்டனர். அகரமுதலி இயக்ககத்தின் செயற்பாடுகளில் சிறிதளவுகூட சுணக்கம் ஏற்படாத வண்ணம் பணிகள் தொடர்ந்து முழுவீச்சில் இயங்க தக்க கருத்துரைகளையும் இயக்குநர் வழங்கினார். காணொலி வாயிலாக நடைபெற்ற இக்கலந்தாய்வுக் கூட்டத்தில், தமிழ்க் கலைக்கழகத்தின் மூலம் தொகுக்கப்பட்ட 100 தமிழ்க் கலைச்சொற்கள் ஆய்வுக்குட்படுத்தப்பட்டுச் செம்மை செய்யப்பட்டன.

பொறுப்பாசிரியர்

# தமிழ் அகராதியியல் நாள் நிறைவு விழா (11.03.2020)







8.11.2019 அன்று எத்திராசு மகளிர் கல்லூரியில் நடந்த அகராதியியல் நாள் தொடக்க விழாவைத் தொடர்ந்து, 11.03.2020 அன்று சென்னை தமிழ்நாடு டாக்டர் எம்.ஜி.ஆர் மருத்துவப் பல்கலைக்கழகத்தில் நிறைவு விழா நடைபெற்றது. மாண்புமிகு உணவுத்துறை அமைச்சர் திரு. இரா. காமராஜ் அவர்கள் அகராதி ஆய்வுமலரை வெளியிட்டுச் சிறப்புரையாற்றினார். மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் திரு.க. பாண்டியராசன் அவர்கள், கோவை திரு. சி. மணிகண்டன், திருச்சி திரு. த. ஆரோக்கிய ஆலிவர் ராசா, திருவாரூர் திரு. இரா.அரிதாசு ஆகியோருக்குத் தூய தமிழ்ப் பற்றாளர் பரிசுகள் வழங்கிச் சிறப்பித்தார். தொல்லியல் துறை ஆணையர் திரு. த. உதயச் சந்திரன் இ.ஆ.ப., அவர்கள் கருத்துரை வழங்க, தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசு செயலாளர் திரு. மகேசன் காசிராசன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள். மருத்துவப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மருத்துவர் சுதா சேசையன் அவர்கள் வாழ்த்துரை வழங்க, அகரமுதலித் திட்ட இயக்குநர் திரு. தங்க காமராசு அவர்கள் நன்றியுரை வழங்கினார்கள். இந்நிகழ்வில் 1,500 மாணவ மாணவிகளும் அறிஞர்களும் கலந்துகொண்டனர். மேடையில் தமிழ்க் கலைக் கழகத்தால் உருவாக்கப்பெற்ற 4,385 சொற்கள் அரசாணைக்காக மாண்புமிகு அமைச்சர் அவர்களிடம் வழங்கப்பட்டன. 11 கல்லூரிகளைச் சேர்ந்த மாணவ மாணவிகள் கலந்து கொண்ட கலைநிகழ்ச்சிகள் அனைவரையும் கவர்ந்தன. கனடாவைச் சார்ந்த திருமதி. மேரி இளங்கோவன் அவர்களின் தமிழிசை நாட்டிய நிகழ்ச்சியை அனைவரும் வியந்து பாராட்டினர்.

# தமிழ் அகராதியியல் நாள் நிறைவு விழா (11.03.2020)
## பன்னாட்டுக் கருத்தரங்கம்


முனைவர் தி.மு. அப்துல்காதர்


மருத்துவர் சுதா சேசையன்


முனைவர் மதன்கார்க்கி


முனைவர் வி.ஜி. சந்தோசம்


முனைவர் மேரி சொர்ணாம்பாள்


திரு. சா.அ. சௌரிராசன்


முனைவர் மு. முத்துவேலு


திரு. மானா பாஸ்கரன்


நற்றமிழ் செ.வ. இராமாநுசன்


திரு. தேவநாயகம் தேவானந்த்

# அறிய வேண்டிய அரிய செய்திகள்




## சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே!

அன்னை சொன்ன மொழி!
ஆதியில் பிறந்த மொழி!
ஈடிலாத் தொன்மை மொழி!
உலகம் போற்றும் செம்மைமொழி!

தமிழ் மொழிக்குள்ள சிறப்புகளில் ‘‘சொற்சிறப்பு’’ என்பதும் ஒன்று. தமிழில் எந்தச்சொல்லும் ஏழெழுத்துக்கு உட்பட்ட சொற்களே. ஆனால் ஆங்கிலத்தில் 12,15,20 எழுத்துகளிலும் சொற்கள் இருக்கின்றன.

தமிழில் 6,7 எழுத்துள்ள சொற்கள் மிகச்சில; 4 எழுத்துகளைக் கொண்ட சொற்கள் பல; 2,3 எழுத்து களைக் கொண்ட சொற்கள் மிகப்பல. குறிப்பாக ஓரெழுத்து ஒருமொழி என்பதும் தமிழில் உண்டு. சான்றாக ‘மா’ என்ற ஓரெழுத்து அழகு, அளவு, அறிவு, மாமரம், குதிரை, செல்வம், நிறம், பரி, பெருமை, மேன்மை போன்ற பல பொருள்களைத் தருவதாக அமைந்துள்ளது. ஓரெழுத்து ஒரு மொழியின் சொற்சிறப்பை விளக்கும்வகையில் சில சான்றுகளைக் காணலாம்:-

| | | |
|---|---|---|
| பூ | - | மலர் |
| நா | - | நாக்கு |
| தீ | - | நெருப்பு |
| போ | - | விரட்டுதல் |
| ஈ | - | ஓர் உயிரி |
| வா | - | வரவேற்றல் |
| கை | - | ஓர் உறுப்பு |

இவற்றின் மூலம் தமிழின் எழுத்துச்சுருக்கத்தையும் சொல்லின் பெருக்கத்தையும் மொழியின் வளத்தையும் அறியலாம். பிறமொழிச் சொற்கள் உருவத்தை மட்டுமே காட்டுவன. ஆனால் தமிழ்ச்சொற்கள் உருவத்தையும் பருவத்தையும் ஒருங்கே காட்டக்கூடியன. ஆங்கிலத்தில் பெண் என்ற சொல்லிற்கு ‘‘Woman’’ என்றும் வடமொழியில் ‘‘ஸ்திரீ’’ என்றும் சொற்கள் உள்ளன. இவை உருவத்தை மட்டுமே காட்டுகின்றன. பருவத்தைக் குறிப்பிட வேண்டுமானால் ‘Young, Old’ என்றுதான் சொல்வார்கள். ஆனால் தமிழில் பெண்ணின் பருவத்தையும் உருவத்தையும் பகுத்துச் சொல்லும் வகையில்,

பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்ற சொற்கள் உள்ளன. பெண்ணுக்கு மட்டும்தான் உருவமும் பருவமும் உள்ளதா என்றால் ஆணுக்கும் உண்டு. சிறுவன் (பாலன்), மீளி, மறவோன், திறவோன், விடலை, காளை, முதுமகன் இவ்வாறு பன்னிருபாட்டியல் இருபாலருக்குமுரிய ஏழுபருவப் பெயர்களைத் தருகிறது.

‘ஆணுக்கும் பெண்ணுக்கும் மட்டுமல்ல, மலரின் வளர்நிலைப் படிகளையும் தமிழ்மொழி சொல்லின் மூலம் விளக்குகிறது. ‘பூ’ என்ற சொல்லை ‘Flower’ என்பர் ஆங்கிலத்தில்; புஷ்பம் என்பர் வடமொழியினர். ஆனால் தமிழில் மலரின் வளர்நிலை குறித்து ஏழு சொற்கள் உள்ளன. அவை;

| | | |
|---|---|---|
| அரும்பு | - | அரும்பும் நிலை |
| மொட்டு | - | மொக்குவிடும் நிலை |
| முகை | - | முகிழ்க்கும் நிலை |
| மலர் | - | மலரும் நிலை |
| அலர் | - | மலர்ந்த நிலை |
| வீ | - | வாடும் நிலை |
| செம்மல் | - | வதங்கும் நிலை |

இலையை எடுத்தால் இதை ஆங்கிலத்தில் ‘‘Leaf’’ என்று மட்டும் சொல்வர். ஆனால் தமிழ்மொழியில்,

| இலைப்பருவம் | | மக்கட் பருவம் |
|---|---|---|
| கொழுந்து | - | குழந்தைப் பருவம் |
| தளிர் | - | இளமைப் பருவம் |
| இலை | - | காதற் பருவம் |
| பழுப்பு | - | முதுமைப் பருவம் |
| சருகு | - | இறுதிப் பருவம் |

என்ற சொற்கள் உள்ளன. தமிழின் சொற்சிறப்பை அறிவதற்கு மற்றுமோர் சான்றாக, இலை என்பது ஒவ்வொரு இடத்திலும் எவ்வாறு பெயர் மாற்றம்பெற்று வழங்குகிறது என்பதைக் காணலாம்.

ஆல், அரசு, மா, பலா, வாழை இவற்றின் இலைகளை மட்டுமே நாம் ‘இலை’ என்கிறோம். அகத்தி, முருங்கை இவற்றின் இலைகளைக் ‘‘கீரை’’ என்கிறோம். மண்ணில் படரும் கொடிவகை இலைகளைப் ‘பூண்டு’ என்கிறோம். இலைகள் ‘‘புல்லாகிவிடும் என்பதற்கேற்ப அறுகு, கோரை இவற்றைப் ‘‘புல்’’ என்கிறோம். கரும்பு, நாணல் இவற்றின் இலைகளைத் தோகை என்பர். தென்னை, பனை, ஈந்து, கமுகு முதலியவற்றின் இலைகள் இலையெனப் பெயர் பெறா. அவற்றை ‘‘ஓலை’’ எனறே அழைப்பது தமிழின் சொல்வளம் எனலாம்.

ஆங்கிலத்தில் அரிசியைக் குறிக்கவும், சோற்றைக் குறிக்கவும் ‘Rice’ தான்; ஆனால் தமிழ்மொழியில் சமைப்பதற்கு முன் ‘அரிசி’ என்றும் சமைத்தபின் ‘சோறு’ என்றும் சொற்கள் உள்ளன. மேற்குறித்த செய்திகள் மூலம் தமிழின் சொல்வளத்தையும் சொற்சிறப்பையும் உணரலாம்.

- ஜெ. சாந்தி
தொகுப்பாளர், அகரமுதலி இயக்ககம்

# திட்டங்களும் செயற்பாடுகளும்
## 2018 - 2020



## அகராதி ஆய்வுமலர் 2019
## விலையில்லாமல் பெற்றுக்கொள்ளலாம்!




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் கடந்த இரண்டாண்டுகளில் அடைந்த வளர்ச்சியை ஆவணமாகப் பதிவுசெய்து வெளியிட்டுள்ள அகராதி ஆய்வுமலர் –2019 இல் 65 அறிஞர்களின் அரிய ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. பல்கலைக் கழகங்கள், கல்லூரிப் பேராசிரியர்கள், துறைத் தலைவர்கள், ஆய்வாளர்கள் ஆகியோர் ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளனர். கட்டுரையாளர்கள் தக்க சான்றுகளுடன் ஜூன் மாதம் 20ஆம் நாளுக்குப் பிறகு இவ்வியக்ககத்திற்கு நேரில் வந்து ஆய்வு மலரைப் பெற்றுக் கொள்ளலாம். www.sorkuvai.com வலைத்தளத்தின் வெளியீட்டுப் பக்கத்திலிருந்தும் பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

‘சொல்வயல்’ மின்னிதழ் தமிழ்நாடு அரசின் ஈடுஇணையில்லாத் தமிழ்ப்பணிகள், அரிய கலைச்சொற்கள், செம்மைமிகு செய்திக் கருவூலம், அகராதி வல்லுநர்களின் ஆராய்ச்சிக் கருத்துகள், துறை அமைச்சரின் கட்டுரை, இவ்வியக்ககத்தின் திட்டச் செயலாக்கம் மற்றும் ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கொண்ட ஒரு முழுமையான தகவல் களஞ்சியமாக விளங்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. உலகத் தமிழறிஞர்களிடமிருந்து மொழியியல், சொல்லாக்கம், அகராதியியல் சார்ந்த கட்டுரைகள், செய்திகள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன.

– பொறுப்பாசிரியர்



**இயக்குநர்**
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.78, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : dir.dtedp@tn.gov.in, dtedp1974@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com